31st August 1961]

| | | |
|---|---|---|
| Thanjavur | .. .. .. | Pattukottai |
| Thirichi | .. .. .. | Thottiam |
| Thirunelveli | .. .. .. | Kuruvikulam |

முதலிய இடங்களில் துவங்கப்பட்டிருக்கிறது.

SRI R. SRINIVASA IYER: ஆறு அணு கொடுத்து சாப்பாடும் போடு கிறார்கள், சாப்பாடு இல்லையென்றால் 12 அணு கூலி கொடுத்து ஆள் கிடைப்பதில்லை என்று சொன்னார்கள். ஆனால் 50 பேர் வைத்து வேலை செய்யக்கூடிய பட்டுக்கோட்டை பிளாக்கிலே 150 பேர் வந்து அந்த 50 பேர்களுக்குக் கொடுக்கக்கூடிய கூலியிலே வேலை செய்வதற்குத் தயாராய் இருக்கிறார்கள் என்று கனம் அமைச்சர் அவர்கள் அறிவார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM: பட்டுக்கோட்டை பிளாக் கொஞ்சம் அலாதியாக இருக்கிறது. இதுமாதிரி அவர்கள் வருவது தஞ்சாவூரில் வேலை செய்யும் மனிதர்களின் தாராள மனப்பான்மையைக் காட்டுகிறது.

SRI S. M. ANNAMALAI: நான் கேள்வி கட்கும்போது 10 அணு கூலி கொடுக்கவேண்டுமென்று சொன்னேன். 10 அணு கூலி கொடுத்து சாப்பாடும் போட்டுதான் என்று சொன்னேன். அதற்குக் காரணம் என்ன வென்றால் வருஷத்திலே மூன்று மாதம்தான் அங்கே வேலை இருப்பதால் சர்க்கார் இந்தக் கூலியை உயர்த்துவார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM: ஸ்ரீ சினிவாச அய்யர் கேள்வி கேட்கும்போது சொன்னார்கள் 50 பேர்கள் வேலை செய்து வாங் கக்கூடிய கூலியை 150 பேர்கள் வேலை செய்து வாங்கிக்கொள்ளத் தயாராய் இருக்கிறார்கள் என்று சொன்னார்கள். தஞ்சாவூர் ஜில்லாவில் இருப்பவர் கள் இந்த வேலைகளுக்கு வரத் தயாராய் இருக்கும்போது மற்ற இடங்களில் வேலைக்கு வரவில்லையென்றால் அவர்கள் சோம்பேறிகளாகத்தான் இருக்க வேண்டும்.

SRI T. S. RAMASWAMI: பத்து இடங்களில் இந்தத் திட்டம் அமுலில் இருப்பதாகச்சொன்னார்கள். கன்யாகுமரி ஜில்லாவிலும் இந்தத் தட்டம் ஆரம்பிக்கப்படுமா

THE HON. SRI C. SUBRAMANIAM: இந்த பைலட் ப்ராஜட் மிகவும் பிற்போக்கான இடங்களில் ஆரம்பிக்கப்பட்டன. இது வெற்றிகர மாக நடந்தால், இதனால் ஏற்படும் பலனைப்பார்த்து மற்ற இடங்களில் எடுத்துக்கொள்ளப்படும்.

*Madras Corporation (Extension of limits)*

* 1569 Q.—SRI N. R. THIAGARAJAN: கனம் ஸ்தல ஸ்தாபன அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

தாம்பரம் வரை சென்னை கார்ப்பரேஷனுடன் சேர்க்கும் உத்தேசம் உண்டா ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON: No, Sir.

SRI K. VINAYAGAM: Were any representations made by the Panchayat Boards of Pallavaram and Tambaram for their inclusion within the City limits?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON: There is no proposal pending with the Government. There was a proposal from them only to make them into municipalities.

SRI A. GOVINDASAMI: தாம்பரம் முனிசிபாலிடி ஆகவேண்டும் என்று ஒரு கோரிக்கை அரசாங்கத்திற்கு வந்ததா ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON: அந்த கோரிக்கை வந்திருக்கிறது. அந்த அரசாங்கம் பரிசீலனை செய்துகொண்டிருக்கிறது.